عقيدة أهل السنة والجماعة
في الصحابة الكرام رضي الله عنهم وأرضاهم

அல்குர்ஆன், சுன்னாவின் ஒளியில்

# நபித்தோழர்கள்


ஆசிரியர்:

அஷ்ஷெய்க் அப்துல் முஹ்சின் பின் ஹமத்
அல்அப்பாத் அல்பதர்

தமிழில்:

ஹசன் அலீ உமரீ






# நுழையும் முன்...

அல்லாஹ்வுக்கே எல்லாப் புகழும். அகிலத்தாருக்கு அருட்கொடையாக அனுப்பப்பட்ட எங்கள் நபி முஹம்மத் ﷺ அவர்கள் மீதும் அன்னாரின் உறவினர், உத்தமத் தோழர்கள் மீதும் ஸலவாத்தும் ஸலாமும் உண்டாவதாக!

அல்லாஹ்வினால் தேர்ந்தெடுக்கப்பட்ட நபிமார்களுக்குப் பிறகு ஆதமின் சந்ததிகளிலேயே சிறந்த அந்தஸ்தைப் பெற்றவர்கள் ஸஹாபாக்கள் என்பதில் முஸ்லிம்களிடையே மாற்றுக் கருத்து இருக்க முடியாது. அல்லாஹ் அந்த மேன்மையாளர்களுக்கு நபி ﷺ அவர்களின் தோழமையைப் பெறுவதற்கான பாக்கியத்தை வழங்கியுள்ளான். நபி ﷺ அவர்களிடமிருந்து நேரடியாக மார்க்கத்தைக் கற்று அதன்படி நடப்பதற்கான அருளையும் அவர்களுக்குக் கொடுத்துள்ளான்.

மேலும் அல்குர்ஆன் மற்றும் சுன்னாவை தமக்குப் பின்னால் வரும் மக்களுக்குத் தெரிவிக்கும் சாட்சியாளர்களாகவும் அவர்களை ஆக்கியுள்ளான். இந்த சாட்சியாளர்கள் தொடர்பாக ஒவ்வொரு முஸ்லிமும் தன் உள்ளத்தில் நல்லெண்ணம் கொள்ள வேண்டும். ஸஹாபாக்களைக் குறை கூறுவதும், அவர்கள் மீது தவறான எண்ணம் கொள்வதும், அல்குர்ஆன் மற்றும் சுன்னாவின் மீதே தவறான எண்ணத்தை ஏற்படுத்தி விடும்.

இதுபற்றி ஹதீஸ் கலையின் இமாமும், இமாம் முஸ்லிம் அவர்களின் பிரபலமான ஆசிரியருமான இமாம் அபூ ஜுர்ஆ அர்ராஜி அவர்கள் கூறும்போது, அல்லாஹ்வின் தூதர் ﷺ அவர்களின் ஸஹாபாக்களிலிருந்து ஒரு ஸஹாபியைக் கூட குறை கூறுபவனைக் கண்டால் அந்தக் குறை கூறுபவன் ஜின்திக் (இஸ்லாமியப் போர்வையில் இருந்துகொண்டே பகிரங்கமாக இஸ்லாத்திற்கு எதிரான கருத்துகளை கூறி எதிர்ப்பவன்) ஆவான் என்பதை நன்றாக அறிந்து கொள்ளுங்கள்.

முஹம்மத் ﷺ அல்லாஹ்வின் தூதர் என்பதை உறுதியாக நாம் ஏற்றுக் கொண்டோம். அல்குர்ஆன் அல்லாஹ்வின் வேதம் என்பதையும் உறுதியாக நாம் ஏற்றுக் கொண்டோம். இந்த அல்குர்ஆனும், சுன்னாவும் நம்வரை வந்தடைய அல்லாஹ்வின் தூதர் ﷺ அவர்களின் ஸஹாபாக்களே காரணமாக இருந்தார்கள். நிச்சயமாக இந்த ஜின்திக்குகள், அல்குர்ஆன் மற்றும் சுன்னாவை அசத்தியமானதாக ஆக்கிடவே நமது இந்த சாட்சியாளர்களை குறைகூற நாடுகின்றனர். இத்தகைய ஜின்திக்குகளை குறை கூறுவதே மிகப் பொருத்தமானதாகும்.

இஸ்லாமிய வரலாற்றில் ஷியாக்கள், கவாரிஜிகள் மற்றும் முஅதஜிலாக்கள் போன்ற வழி தவறிய கூட்டங்கள் ஸஹாபாக்களை குறை கூறியும், இழிவுபடுத்தியும் உள்ளார்கள். ஸஹாபாக்களைப் பற்றிய இந்தத் தவறான நம்பிக்கையே இவர்கள் வழிகெட்டுப் போனதற்கான அடிப்படைக் காரணமாகும் என்பதை இஸ்லாமிய அறிஞர்கள் தெளிவாக எடுத்துக் காட்டியுள்ளார்கள். மேலும் ஸஹாபாக்களின் பாதையில் செல்பவர்களே வெற்றிபெறும் கூட்டத்தில் இருப்பார்கள் என்பதையும் தெளிவுபடுத்தி உள்ளார்கள்.

எனவே சத்தியப் பாதையில் அல்குர்ஆன் மற்றும் சுன்னாவை பின்பற்றியவர்களான அஹ்லுஸ்ஸுன்னத் வல் ஜமாத்தினரின்

வழியில் ஸஹாபாக்களைப் பற்றிய சரியான நம்பிக்கை நம்மில் ஒவ்வொருவரிடமும் அவசியம் இருக்க வேண்டும். அதை இரத்தினச் சுருக்கமாக மதீனா இஸ்லாமியப் பல்கலைக் கழகத்தின் பேராசிரியரும், மஸ்ஜிதுந் நபவீயில் இஸ்லாமியப் பல்கலைக் கழக மாணவர்களுக்காக ஹதீஸ் நூல்களின் விளக்கவுரையை அளித்துவரும் பெரும் மதிப்பிற்குரிய அஷ்ஷைக் அப்துல் முஹ்சின் அல்அப்பாத் அவர்கள் முன்சென்ற நல்லோர்களின் (அஸ்ஸலஃஃபுஸ் ஸாலிஹீன்களின்) நூல்களிலுள்ள அவசியமான தகவல்களை திரட்டி இந்தச் சிறிய அரபி புத்தகத்தில் பதிவு செய்துள்ளார்கள்.

இத்தகைய முக்கியத்துவம் வாய்ந்த நூலின் கருத்துகளை தமிழ் பேசும் முஸ்லிம்களும் அறிய வேண்டும் என்பதற்காக தமிழில் மொழிபெயர்த்துள்ளேன். அல்லாஹ் இந்த நூலை முஸ்லிம்களுக்கு பலனுள்ளதாக ஆக்கிட வேண்டி பிராத்திக்கின்றேன்!

இறுதியாக மொழிபெயர்ப்பை சரிபார்த்துத் தந்த மௌலவி யூசுப் பாகவி அவர்களுக்கும் லேஅவுட் டிசைனர் ஹைதர் அலி அவர்களுக்கும் அல்லாஹ் நற்கூலி வழங்குவானாக! ஆமீன்.

அன்புடன்
**ஹசன் அலீ உமரீ**
IRGC - சென்னை.
hasanumari@gmail.com



புகழனைத்தும் அல்லாஹ்விற்கே. அவனது அடியாரும், தூதருமான எங்கள் நபி முஹம்மத் ﷺ அவர்கள், அவர்களின் குடும்பத்தார்கள் மற்றும் ஸஹாபாக்கள் அனைவர் மீதும் அல்லாஹ்வின் அருளும், பரக்கத்தும் உண்டாவதாக!

அல்லாஹ் தனது அடியார்களுக்குக் கருணை காட்டி, பேருபகாரம் புரிந்ததின் விளைவாகவே அவர்களில் இருந்தே ஒரு தூதரை அவர்களுக்கு அனுப்பினான். அவ்வாறு தூதரை அனுப்புவதற்கான காரணம், அத்தூதர் அடியார்களின் ரப்பின் தூதுச் செய்தியை அவர்களுக்கு எடுத்துரைத்து, அவர்களுக்கு பயனளிக்கும் யாவற்றையும் போதித்து, அவர்களுக்கு இடரளிக்கும் அனைத்தையும் விட்டு எச்சரிப்பதாகும்.

அல்லாஹ்வின் தூதர் ﷺ அவர்கள், எந்தத் தூதுச் செய்தியைக் கொண்டு அனுப்பப்பட்டார்களோ அதனை முழுமையாகவும், பரிபூரணமாகவும் அறிவித்து விட்டார்கள். அனைத்து நன்மைகளையும் போதித்து, அனைத்து தீங்குகளை விட்டும் மக்களை எச்சரித்து விட்டார்கள்.

மேலும், அல்லாஹ் அந்த நபியின் தோழமைக்கும், அவர்களிடமிருந்து மார்க்கத்தைக் கற்றுக் கொள்வதற்கும் ஒரு கூட்டத்தைத் தேர்ந்தெடுத்தான். அவர்கள் சமூகங்கள் அனைத்திலும் சிறந்த சமூகமாகிய இந்த சமூகத்தில் மிக்க மேலானவர்கள். அல்லாஹ் தனது தூதர் ﷺ அவர்களின் தோழமையின் மூலம் அவர்களைச் சிறப்பித்தான். மேலும் இவ்வுலக வாழ்விலேயே அத்தூதரை காணக்கூடிய பாக்கியத்தையும் அவர்களின் திருவாயிலிருந்து வெளிப்படும் செய்திகளை நேரடியாக செவியேற்கும் பாக்கியத்தையும் பிரத்யேகமாக அல்லாஹ் அவர்களுக்கு வழங்கினான். இது போன்ற பாக்கியங்கள் அல்லாஹ்வின் அருளாகும். அவன் நாடியவர்கள் மீது அதனை ஏற்படுத்துகிறான். அல்லாஹ் மகத்தான அருளுக்குரியவன்.

## ஸஹாபாக்களின் சிறப்பையும், மகத்தான அந்தஸ்தையும் வெளிப்படுத்தும் விதமாக வந்துள்ள அல்குர்ஆன், சுன்னாவின் ஆதாரங்கள்

அல்லாஹ் தனது தூதருக்கு வழங்கிய பேரொளியையும், நேர்வழியையும் அந்தத் தூதரிடமிருந்து பெற்ற ஸஹாபாக்கள் அதனை முழுமையாகவும், பரிபூரணமாகவும் பிறருக்கு

எடுத்துரைத்து விட்டார்கள். ஆகவே அல்லாஹ்வின் தூதர் ﷺ அவர்களோடு தோழமை கொண்டதற்காகவும் அவர்களோடு அல்லாஹ்வின் பாதையில் ஜிஹாத் செய்ததற்காகவும், இஸ்லாமை பரப்புவதில் அவர்கள் மேற்கொண்ட முயற்சி களுக்காகவும் மகத்தான கூலி அவர்களுக்கு உண்டு. இதனால் அவர்களுக்குப் பின் வந்தவர்களுக்கு நன்மை கிடைக்கப் பெறுவதைப் போன்று அதில் அவர்களுக்கும் நன்மை கிடைக்கும். ஏனெனில், அவர்களே அல்லாஹ்வின் தூதர் ﷺ அவர்களுக்கும், பின் வந்தவர்களுக்கும் இடையே பாலமாக இருக்கின்றனர். அல்லாஹ்வின் தூதர் ﷺ அவர்களும் இதனை தெளிவுப்படுத்திக் கூறுகிறார்கள்.

عَنْ أَبِى هُرَيْرَةَ أَنَّ رَسُولَ اللَّهِ صلى الله عليه وسلم قَالَ مَنْ دَعَا إِلَى هُدًى كَانَ لَهُ مِنَ الأَجْرِ مِثْلُ أُجُورِ مَنْ تَبِعَهُ لاَ يَنْقُصُ ذَلِكَ مِنْ أُجُورِهِمْ شَيْئًا

யார் பிறரை நேர்வழியின் பக்கம் அழைக்கிறாரோ அவரை பின்பற்றுபவருக்கு நன்மை கிடைக்கப் பெறுவதைப் போன்று அவருக்கும் நன்மை கிடைக்கும். அவர்களின் நன்மைகளில் எவ்வித குறைவும் ஏற்படுத்தப்பட மாட்டாது. (அறிவிப்பாளர்: அபூஹுரைரா ؓ, நூல்: முஸ்லிம்)

அல்லாஹ் தனது வேதத்திலும், அல்லாஹ்வின் தூதர் ﷺ அவர்கள் தனது மேன்மையான சுன்னாவிலும் ஸஹாபாக்களைப் புகழ்ந்து பாராட்டிக் கூறியுள்ளார்கள்.

இதுவே ஸஹாபாக்களின் கண்ணியத்திற்கும், சிறப்பிற்கும் போதுமானதாகும்.

وَالسَّابِقُونَ الْأَوَّلُونَ مِنَ الْمُهَاجِرِينَ وَالْأَنْصَارِ وَالَّذِينَ اتَّبَعُوهُمْ بِإِحْسَانٍ رَضِيَ اللَّهُ عَنْهُمْ وَرَضُوا عَنْهُ وَأَعَدَّ لَهُمْ جَنَّاتٍ تَجْرِي تَحْتَهَا الْأَنْهَارُ خَالِدِينَ فِيهَا أَبَدًا ذَلِكَ الْفَوْزُ الْعَظِيمُ

முஹாஜிர்களிலும், அன்ஸாரிகளிலும் (இஸ்லாத்தை ஏற்க) முதலாவதாக முந்திக் கொண்டவர்களும், (அவர்களின் சொல், செயல்களாகிய) நற்காரியங்களில் அவர்களைப் பின்பற்றினார்களே அவர்களும் அவர்களை அல்லாஹ் திருப்தியடைந்தான். அவர்களும் (அல்லாஹ்வாகிய) அவனை திருப்தியடைந்தனர். அன்றியும் சுவனபதிகளை அவர்களுக்கென அவன் தயாராக்கி வைத்திருக்கிறான். அவற்றின் கீழ் ஆறுகள் ஓடிக்கொண்டிருக்கும் அவற்றிலேயே அவர்கள் நிரந்தரமாக(த் தங்கி) இருப்பார்கள். இது மகத்தான வெற்றியாகும். (9:100)

مُحَمَّدٌ رَسُولُ اللَّهِ وَالَّذِينَ مَعَهُ أَشِدَّاءُ عَلَى الْكُفَّارِ رُحَمَاءُ بَيْنَهُمْ تَرَاهُمْ رُكَّعًا سُجَّدًا يَبْتَغُونَ فَضْلًا مِنَ اللَّهِ وَرِضْوَانًا سِيمَاهُمْ فِي وُجُوهِهِمْ مِنْ أَثَرِ السُّجُودِ ذَلِكَ مَثَلُهُمْ فِي التَّوْرَاةِ وَمَثَلُهُمْ فِي الْإِنْجِيلِ كَزَرْعٍ أَخْرَجَ شَطْأَهُ فَآزَرَهُ فَاسْتَغْلَظَ

فَاسْتَوَى عَلَى سُوقِهِ يُعْجِبُ الزُّرَّاعَ لِيَغِيظَ بِهِمُ الْكُفَّارَ وَعَدَ اللَّهُ الَّذِينَ آمَنُوا وَعَمِلُوا الصَّالِحَاتِ مِنْهُمْ مَغْفِرَةً وَأَجْرًا عَظِيمًا

முஹம்மத் அல்லாஹ்வின் தூதராவார். அவருடன் இருப்பவர்களோ நிராகரிப்போர் மீது மிகக் கண்டிப்பானவர்கள். தங்களுக்கிடையே மிக்க அன்புடையவர்கள். ருகூஉ செய்பவர்களாகவும், ஸுஜூது செய்கிறவர்களாகவும் அவர்களை நீர் காண்பீர். அல்லாஹ்விடமிருந்து பேரருளையும், பொருத்தத்தையும் தேடுவார்கள். அவர்களுடைய அடையாளம் சிரம்பணிவதின் அடையாளத்தினால் அவர்களுடைய முகங்களில் இருக்கும். இதுவே தவ்றாத் (வேதத்)தில் உள்ள அவர்களின் உதாரணமாகும். இன்னும் இன்ஜீலில் அவர்களுக்குள்ள உதாரணமானது: ஒரு பயிரைப் போன்றதாகும். அது தன் முளையை வெளிப்படுத்தி பின்னர் அதை பலப்படுத்துகிறது. பின்னர் அது (தடித்து) கனமாகின்றது. பின்னர் அது தன் தண்டின் மீது நிமிர்ந்து நிற்கின்றது. விவசாயிகளை ஆச்சரியமடையச் செய்கிறது. இவர்களைக் கொண்டு நிராகரிப்போருக்கு அவன் கோபமூட்டுவதற்காக (இவ்வாறு உதாரணங்களைக் கூறுகிறான்) அவர்களில் விசுவாசங்கொண்டு நற்கருமங்களும் செய்கின்றார்களே அத்தகையவர்களுக்கு அல்லாஹ் மன்னிப்பையும், மகத்தான கூலியையும் வாக்களித்திருக்கிறான். (48:29)

இந்த வசனத்தில் (لِيَغِيظَ بِهِمُ الْكُفَّارَ) ஸஹாபாக்களைக் கொண்டு

நிராகரிப்போருக்கு அல்லாஹ் கோபமூட்டுகிறான் என்று உள்ளது. எனவே அல்லாஹ்வின் தூதர் ﷺ அவர்களின் ஸஹாபாக்கள் மீது கோபமோ அல்லது அவர்களைப் பற்றி தனது உள்ளத்தில் வெறுப்போ கொள்பவர்களை அல்லாஹ், கடுமையாக எச்சரித்தும், பயங்கரமான சட்டத்தை தெளிவுபடுத்தியும் இந்த வசனத்தில் தெரிவித்துள்ளான்.

لَا يَسْتَوِي مِنْكُمْ مَنْ أَنْفَقَ مِنْ قَبْلِ الْفَتْحِ وَقَاتَلَ أُولَئِكَ أَعْظَمُ دَرَجَةً مِنَ الَّذِينَ أَنْفَقُوا مِنْ بَعْدُ وَقَاتَلُوا وَكُلًّا وَعَدَ اللَّهُ الْحُسْنَى وَاللَّهُ بِمَا تَعْمَلُونَ خَبِيرٌ

உங்களில் வெற்றிக்கு (ஹுதைபிய்யா உடன்படிக்கைக்கு) முன்னர் யார் (தன் பொருளைச்) செலவும் செய்து, யுத்தமும் புரிந்தாரோ அவருக்கு உங்களில் (யாரும்) நிகராகமாட்டார். (முந்திய) அவர்கள் (ஹுதைபிய்யா உடன்படிக்கைக்குப்) பிறகு செலவும் செய்து போரிட்டார்களோ அத்தகையோரைவிட பதவியால் மிக மகத்தானவர்கள். (எனினும்) ஒவ்வொருவருக்கும் அல்லாஹ் நன்மையையே வாக்களித்திருக்கிறான் மேலும் அல்லாஹ் நீங்கள் செய்பவற்றை நன்குணர்பவன். (57:10)

لِلْفُقَرَاءِ الْمُهَاجِرِينَ الَّذِينَ أُخْرِجُوا مِنْ دِيَارِهِمْ وَأَمْوَالِهِمْ يَبْتَغُونَ فَضْلًا مِنَ اللَّهِ وَرِضْوَانًا وَيَنْصُرُونَ اللَّهَ وَرَسُولَهُ أُولَئِكَ هُمُ الصَّادِقُونَ

தங்கள் வீடுகளையும் தங்கள் பொருட்களையும் விட்டு (அக்கிரமமாக மக்காவிலிருந்து) வெளியேற்றப்பட்டார்களே அத்தகைய ஹிஜ்ரத்துச் செய்தவர்களான ஏழைகளுக்கும் (அப்பொருளில் பங்குண்டு.) அவர்கள் அல்லாஹ்விடமிருந்து பேரருளையும் (அவனுடைய) பொருத்தத்தையும் தேடுகின்றனர். இன்னும் அல்லாஹ்வுக்கும் அவனுடைய தூதருக்கும் உதவி செய்கின்றனர். இவர்கள்தாம் உண்மை யாளர்கள். (அல்குர்ஆன் - 59:8)

وَالَّذِينَ تَبَوَّءُوا الدَّارَ وَالْإِيمَانَ مِنْ قَبْلِهِمْ يُحِبُّونَ مَنْ هَاجَرَ إِلَيْهِمْ وَلَا يَجِدُونَ فِي صُدُورِهِمْ حَاجَةً مِمَّا أُوتُوا وَيُؤْثِرُونَ عَلَى أَنْفُسِهِمْ وَلَوْ كَانَ بِهِمْ خَصَاصَةٌ وَمَنْ يُوقَ شُحَّ نَفْسِهِ فَأُولَئِكَ هُمُ الْمُفْلِحُونَ

இன்னும் (முஹாஜிர்களாகிய) அவர்களுக்கு முன்பே (மதீனாவில்) வீட்டையும் (அல்லாஹ்வின் மீது) விசுவாசம் கொள்வதையும் (கலப்பற்றதாக்கிக்) கொண்டிருந்தார்களே அத்தகைய (அன்ஸார்களான)வர்கள், தம்பால் ஹிஜ்ரத்துச் செய்து வந்தோரை நேசிப்பார்கள். மேலும் (ஹிஜ்ரத்துச் செய்து வந்த) அவர்களுக்குக் கொடுக்கப்பட்டதைப் பற்றி தங்கள் நெஞ்சங்களில் காழ்ப்புணர்ச்சியைப் பெறமாட்டார்கள். மேலும் தங்களுக்கு (கடும்) தேவையிருந்த போதிலும் தங்களை விட (முஹாஜிர்களான அவர்களை)த் தேர்ந்தெடுத்துக் கொள்வார்கள். இன்னும் எவர் தன் உலோபத்தனத்திலிருந்து

காக்கப்பட்டாரோ, அத்தகையோர்தாம் வெற்றி பெற்றவர்கள். (அல்குர்ஆன் - 59:9)

وَالَّذِينَ جَاءُوا مِنْ بَعْدِهِمْ يَقُولُونَ رَبَّنَا اغْفِرْ لَنَا وَلِإِخْوَانِنَا الَّذِينَ سَبَقُونَا بِالْإِيمَانِ وَلَا تَجْعَلْ فِي قُلُوبِنَا غِلًّا لِلَّذِينَ آمَنُوا رَبَّنَا إِنَّكَ رَءُوفٌ رَحِيمٌ

மேலும் அவர்களுக்குப் பின் வந்தார்களே அத்தகையவர்கள், எங்கள் இரட்சகனே! எங்களையும் விசுவாசம் கொள்வதில் எங்களை முந்திவிட்டார்களே அத்தகைய எங்களுடைய சகோதரர்களையும் நீ மன்னித்தருள்வாயாக! விசுவாசங் கொண்டவர்களைப் பற்றி எங்களுடைய இதயங் களில் வெறுப்பை ஏற்படுத்தாதிருப்பாயாக! எங்கள் இரட்சகனே நிச்சயமாக நீ மிக்க இரக்கமுடையவன் மிக்க கருணையுடையவன் என்று (பிராத்தனை செய்தும்) கூறுவார் கள். (அல்குர்ஆன் - 59:10)

(57:8-10) போர் செய்யாமல் எதிரிகளிடமிருந்து கிடைக்கப் பெற்ற பொருட்களைப் பெற தகுதியுடையவர்களைப் பற்றி அல்லாஹ் கூறும்போது, முதல் வசனத்தில் முஹாஜிர்கள் பற்றியும், இரண்டாவது வசனத்தில் அன்ஸார்கள் பற்றியும், மூன்றாவது வசனத்தில் முஹாஜிர்கள் மற்றும் அன்ஸார்களுக்குப் பிறகு அல்லாஹ் எங்களுடைய உள்ளத்தில் ஸஹாபாக்களைப் பற்றி எந்த வெறுப்பையும் ஏற்படுத்திவிடாதே என்று பிராத்தித்தும் அவர்களுக்காக

பாவமன்னிப்பை தேடுபவர்களைப் பற்றியும் கூறுகிறான்.

இந்த மூன்று பிரிவினர்கள் அல்லாத மற்றவர்கள் (ஸஹாபாக்களை ஏசுபவர்கள்) ஷைத்தானின் சூழ்ச்சி வலையிலும் ஏமாற்றத்திலும் சிக்கிக் கொண்டவர்களாகவே தவிர வேறு யாராகவும் இருக்க முடியாது.

ஆயிஷா ﵂ அவர்கள் உர்வா பின் ஜுபைரிடம் இந்த ஏமாற்றத்திற்குரிய சிலரைப் பற்றி குறிப்பிடும்போது, அல்லாஹ்வின் தூதர் ﷺ அவர்களின் ஸஹாபாக்களுக்காக பாவமன்னிப்பை தேடச் சொன்னால் இவர்கள் அந்த ஸஹாபாக்களை ஏசுகின்றனர் என்றார்கள்.

இமாம் நவவீ ﵀ அவர்கள் ஸஹீஹ் முஸ்லிமின் விளக்கவுரையில் சூரத்துல் ஹஷ்ரின் வசனத்தை குறிப்பிட்ட பிறகு கூறுகிறார்கள்: இந்த வசனத்தை ஆதாரமாக வைத்தே இமாம் மாலிக் ﵀ அவர்கள் ஸஹாபாக்களை ஏசுபவர்களுக்கு போர் செய்யாமல் எதிரிகளிடமிருந்து கிடைக்கும் பொருளில் எவ்வித பங்குமில்லை. ஏனெனில் அல்லாஹ் இந்தப் பொருட் களைப் பற்றிக் கூறும்போது முஹாஜிர்கள், அன்ஸார்கள் மற்றும் அவர்களுக்காக பாவமன்னிப்பை தேடுபவர்களையே குறிப்பிடுகிறான். எனவே யார் ஸஹாபாக்களுக்குப் பிறகு அவர்களுக்காக பாவமன்னிப்பை வேண்டுகிறாரோ அவர் களுக்கு மட்டுமே அதில் பங்குண்டு. ஏசுபவர்களுக்கு இல்லை என்று கூறுகிறார்கள்.

இமாம் இப்னு கஸீர் ﵀ அவர்கள் (59:10) இந்த வசனத்தின் விளக்கத்தில் கூறுகிறார்கள்: அல்லாஹ் புகழ்ந்து குறிப்பிட்டுள்ள

ஸஹாபாக்களை ஏசுபவர்களான ராபிளாக்களுக்கு, போர் செய்யாமல் எதிரிகளிடமிருந்து கிடைக்கப்பெற்ற பொருளில் எவ்வித பங்குமில்லை என்று இந்த வசனத்தை ஆதாரமாக வைத்துக் கூறிய இமாம் மாலிக் ﵀ அவர்களின் கூற்று மிகவும் சரியானதாகும். ஏனெனில் அல்லாஹ் புகழ்ந்து கூறியுள்ள ஸஹாபாக்களுக்குப் பிறகு அவர்களுக்காக பாவமன்னிப்பைத் தேடுபவர்களில் இவர்கள் இடம்பெற மாட்டார்கள்.

எங்கள் இரட்சகனே! எங்களையும் விசுவாசம் கொள்வதில் எங்களை முந்தி விட்டார்களே அத்தகைய எங்களுடைய சகோதரர்களையும் நீ மன்னித்தருள்வாயாக! விசுவாசம் கொண்டவர்களைப் பற்றி எங்களுடைய இதயங்களில் வெறுப்பை ஏற்படுத்தாதிருப்பாயாக! எங்கள் இரட்சகனே, நிச்சயமாக நீ மிக்க இரக்கமுடையவன் மிக்க கருணை யுடையவன் என்று (பிராத்தனை செய்தும்) கூறுவார்கள். (59:10)

عَنْ عَبْدِ اللَّهِ رضى الله عنه عَنِ النَّبِىِّ صلى الله عليه وسلم قَالَ خَيْرُ النَّاسِ قَرْنِى، ثُمَّ الَّذِينَ يَلُونَهُمْ ، ثُمَّ الَّذِينَ يَلُونَهُمْ

நபி ﷺ அவர்கள் கூறினார்கள்: மனிதர்களில் சிறந்தவர்கள் என் தலைமுறையினர் ஆவர். பிறகு அவர்களை அடுத்து வருபவர்கள். பிறகு அவர்களை அடுத்து வருபவர்கள். அறிவிப்பாளர்: அப்துல்லாஹ் பின் மஸ்ஊத் ﵁, நூல்: புகாரி - 2652)

عَنْ أَبِى هُرَيْرَةَ قَالَ قَالَ رَسُولُ اللَّهِ صلى الله عليه وسلم خَيْرُ أُمَّتِى الْقَرْنُ الَّذِينَ بُعِثْتُ فِيهِمْ ثُمَّ الَّذِينَ يَلُونَهُمْ ». وَاللَّهُ أَعْلَمُ أَذَكَرَ الثَّالِثَ أَمْ لاَ

அல்லாஹ்வின் தூதர் ﷺ அவர்கள் கூறினார்கள்: எந்தத் தலைமுறையினர் மத்தியில் நான் அனுப்பப்பட்டேனோ அவர்களே என் உம்மத்தவர்களில் சிறந்தவர்கள் ஆவர். பிறகு அவர்களை அடுத்து வருபவர்கள் ஆவர். பிறகு அவர்களை அடுத்து வருபவர்கள் ஆவர். மூன்றாவது தலைமுறையினர் பற்றி அல்லாஹ்வின் தூதர் ﷺ அவர்கள் கூறினார்களா இல்லையா என்பதை அல்லாஹ்வே நன்கறிவான். (அறிவிப்பாளர்: அபூ ஹுரைரா رضي الله عنه, நூல்: முஸ்லிம் - 6636)

عَنْ عَائِشَةَ قَالَتْ سَأَلَ رَجُلٌ النَّبِىَّ صلى الله عليه وسلم أَىُّ النَّاسِ خَيْرٌ قَالَ الْقَرْنُ الَّذِى أَنَا فِيهِ ثُمَّ الثَّانِى ثُمَّ الثَّالِثُ

ஒரு மனிதர் நபி ﷺ அவர்களிடம், மனிதர்களில் சிறந்தவர்கள் யார்? எனக் கேட்டார். அதற்கு நபி ﷺ அவர்கள், நான் வாழ்கின்ற காலத்தை சேர்ந்த தலைமுறையினர். பின் அதற்கடுத்த தலைமுறையினர். பின் அதற்கடுத்த தலைமுறையினர் என்று பதிலளித்தார்கள். (அறிவிப்பாளர்: ஆயிஷா رضي الله عنها, நூல்: முஸ்லிம் - 6641)

عَنْ أَبِى سَعِيدٍ الْخُدْرِىِّ رضى الله عنهم عَنِ النَّبِىِّ صلى

الله عليه وسلم قَالَ يَأْتِى زَمَانٌ يَغْزُو فِئَامٌ مِنَ النَّاسِ ، فَيُقَالُ فِيكُمْ مَنْ صَحِبَ النَّبِىَّ صلى الله عليه وسلم فَيُقَالُ نَعَمْ . فَيُفْتَحُ عَلَيْهِ ، ثُمَّ يَأْتِى زَمَانٌ فَيُقَالُ فِيكُمْ مَنْ صَحِبَ أَصْحَابَ النَّبِىِّ صلى الله عليه وسلم فَيُقَالُ نَعَمْ . فَيُفْتَحُ ، ثُمَّ يَأْتِى زَمَانٌ فَيُقَالُ فِيكُمْ مَنْ صَحِبَ صَاحِبَ أَصْحَابِ النَّبِىِّ صلى الله عليه وسلم فَيُقَالُ نَعَمْ . فَيُفْتَحُ »

மக்களில் ஒரு குழுவினர் போருக்குச் செல்கின்ற ஒரு காலம் வரும். அப்போது நபி ﷺ அவர்களின் தோழமையை பெற்றவர்களில் யாரேனும் உங்களிடையே இருக்கின்றார்களா? என்று கேட்கப்படும். அதற்கு ‘ஆம்’ என்று பதிலளிக்கப்படும். அந்தப் போரில் அவர்களுக்கு வெற்றியளிக்கப்படும். பிறகு ஒரு காலம் வரும் அப்போது நபி ﷺ அவர்களின் தோழர்களோடு தோழமை கொண்டவர்களில் யாரேனும் உங்களிடம் இருக்கின்றார்களா? என்று கேட்கப்படும். அதற்கு ‘ஆம்’ என்று பதிலளிக்கப்படும். அந்தப் போரில் அவர்களுக்கு வெற்றியளிக்கப்படும். பிறகு ஒரு காலம் வரும் அப்போது நபி ﷺ அவர்களின் தோழர்களின் தோழர்களோடு தோழமை கொண்டவர்கள் உங்களிடையே இருக்கின்றார்களா? என்று கேட்கப்படும். அதற்கு ‘ஆம்’ என்று பதிலளிக்கப்படும். அந்தப் போரில் அவர்களுக்கு வெற்றியளிக்கப்படும். (அறிவிப்பாளர்: அபூ சயீத் அல்குத்ரி ؓ, நூல்: புகாரி - 2897)

இப்னு அப்பாஸ் ﷺ அவர்கள் கூறினார்கள்: முஹம்மத் ﷺ அவர்களின் தோழர்களை ஏசாதீர்கள். ஏனெனில் அல்லாஹ் வின் தூதர் ﷺ அவர்களோடு அவர்களில் ஒருவர் சிறிது நேரம் நின்று வணங்கியது உங்களில் ஒருவர் நாற்பது ஆண்டுகள் நின்று வணங்கியதைவிடச் சிறந்ததாகும். (இப்னு பத்தா இதனை சரியான அறிவிப்பைக் கொண்டு அறிவித்திருப்பதாக இப்னு தைமிய்யா ﷺ அவர்கள் மின்ஹாஜுஸ் ஸுன்னா நூலில் குறிப்பிடுகிறார்கள்.

வகீயு ﷺ அவர்களின் அறிவிப்பில், உங்களில் ஒருவர் காலமெல்லாம் நின்று வணங்கியதைவிட சிறந்ததாகும் என்றுள்ளது.

சொர்க்கவாசிகள் என்று நன்மாராயம் கூறப்பட்ட பத்து ஸஹாபாக்களைப் பற்றி ஸயீத் பின் ஜைத் ﷺ அவர்களிடம் நினைவுறத்தப்பட்ட போது, அவர்கள் கூறினார்கள்: அல்லாஹ்வின் மீது சத்தியமாக! நபி ﷺ அவர்களோடு போர்க் களத்தில் தனது முகத்தை புழுதி படியச் செய்த ஒருவரின் செயல், உங்களில் ஒருவரின் வயது நூஹ் நபியின் வயதிற்கு ஒப்பானதாக இருந்து அவற்றில் செய்யும் நன்மையான செயல்களைவிட சிறந்ததாகும். (அபூ தாவூத், திர்மிதி)

மனிதர்களில் சிலர் அபூபக்கர் ﷺ, உமர் ﷺ அவர்கள் உட்பட நபி ﷺ அவர்களின் ஸஹாபாக்களை ஏசுகின்றனர் என்று ஆயிஷா ﷺ அவர்களிடத்தில் கூறப்பட்டது. அப்போது ஆயிஷா ﷺ அவர்கள் இந்தச் செயலை ஏன் ஆச்சரியமானதாக பார்க்கிறீர்கள்? அந்த ஸஹாபாக்களின்

அமல்கள் முற்றுப்பெற்று விட்டன. எனினும் அவர்களுக்கு நன்மை கிடைப்பதற்கான வழி முற்றுப்பெறாமல் இருப்பதை அல்லாஹ் விரும்பியுள்ளான் என்றார்கள். (அறிவிப்பாளர்: ஜாபிர் ﵁ அவர்கள், இதனை இப்னுல் அஸீர் ஜாமியுல் உஸூலில் குறிப்பிட்டுள்ளார்கள்.)

ஆயிஷா ﵂ அவர்களின் இந்தக் கூற்றுக்கு சான்றாக முஸ்லிமில் வந்துள்ள ஹதீஸ்

عَنْ أَبِى هُرَيْرَةَ أَنَّ رَسُولَ اللَّهِ صلى الله عليه وسلم قَالَ أَتَدْرُونَ مَا الْمُفْلِسُ . قَالُوا الْمُفْلِسُ فِينَا مَنْ لاَ دِرْهَمَ لَهُ وَلاَ مَتَاعَ. فَقَالَ إِنَّ الْمُفْلِسَ مِنْ أُمَّتِى يَأْتِى يَوْمَ الْقِيَامَةِ بِصَلاَةٍ وَصِيَامٍ وَزَكَاةٍ وَيَأْتِى قَدْ شَتَمَ هَذَا وَقَذَفَ هَذَا وَأَكَلَ مَالَ هَذَا وَسَفَكَ دَمَ هَذَا وَضَرَبَ هَذَا فَيُعْطَى هَذَا مِنْ حَسَنَاتِهِ وَهَذَا مِنْ حَسَنَاتِهِ فَإِنْ فَنِيَتْ حَسَنَاتُهُ قَبْلَ أَنْ يُقْضَى مَا عَلَيْهِ أُخِذَ مِنْ خَطَايَاهُمْ فَطُرِحَتْ عَلَيْهِ ثُمَّ طُرِحَ فِى النَّارِ

அல்லாஹ்வின் தூதர் ﷺ அவர்கள், திவாலாகிப்போனவர் என்றால் யார் என்று உங்களுக்குத் தெரியுமா? என்று கேட்டார்கள். யாரிடம் வெள்ளிக்காசோ, பொருட்களோ இல்லையோ அவர்தான் எங்களிடம் திவாலாகிப்போனவர் என்று ஸஹாபாக்கள் பதிலளித்தார்கள். அல்லாஹ்வின்

தூதர் ﷺ அவர்கள் என் சமுதாயத்தில் திவாலாகிப்போனவர் யாரெனில், அவர் மறுமை நாளில் தொழுகை, நோன்பு, ஜகாத் ஆகியவற்றுடன் வருவார். (அதே நேரத்தில்) அவர் ஒருவரைத் திட்டியிருப்பார்; ஒருவர் மீது அவதூறு சொல்லியிருப்பார்; ஒருவரது பொருளை (முறைகேடாக) உண்டிருப்பார்; ஒருவரது இரத்தத்தைச் சிந்தியிருப்பார்; ஒருவரை அடித்திருப்பார். ஆகவே அவருடைய நன்மைகளிலிருந்து சில இவருக்குக் கொடுக்கப்படும். இன்னும் சில இவருக்கு கொடுக்கப்படும். அவருடைய நன்மைகள் தீர்ந்துவிட்டால் (அவரால் பாதிக்கப் பட்ட) மக்களின் பாவங்களிலிருந்து சில எடுக்கப்பட்டு இவர்மீது போடப்படும். பிறகு அவர் நரக நெருப்பில் தூக்கியெறியப்படுவார். அவரே திவாலாகிப்போனவர் ஆவார் என்று நபி அவர்கள் கூறினார்கள். (அறிவிப்பாளர்: அபூ ஹுரைரா رضي الله عنه, நூல்: முஸ்லிம் - 6744)

عَنْ أَبِى سَعِيدٍ الْخُدْرِىِّ رضى الله عنه قَالَ قَالَ النَّبِىُّ صلى الله عليه وسلم لاَ تَسُبُّوا أَصْحَابِى ، فَلَوْ أَنَّ أَحَدَكُمْ أَنْفَقَ مِثْلَ أُحُدٍ ذَهَبًا مَا بَلَغَ مُدَّ أَحَدِهِمْ وَلاَ نَصِيفَهُ

நபி ﷺ அவர்கள் கூறினார்கள்: எனது ஸஹாபாக்களை ஏசாதீர்கள். உங்களில் ஒருவர் உஹுத் மலையளவுக்கு தங்கத்தைச் செலவிட்டாலும், ஸஹாபாக்களில் ஒருவர் செலவிட்ட இரு கையளவு அல்லது அதில் பாதியளவைக் கூட எட்ட முடியாது என்றார்கள். (அறிவிப்பாளர்: அபூ சயீத் அல்குத்ரீ رضي الله عنه, நூல்: புகாரி - 3673)

عَنْ أَبِى هُرَيْرَةَ قَالَ قَالَ رَسُولُ اللَّهِ -صلى الله عليه وسلم- لاَ تَسُبُّوا أَصْحَابِى لاَ تَسُبُّوا أَصْحَابِى فَوَالَّذِى نَفْسِى بِيَدِهِ لَوْ أَنَّ أَحَدَكُمْ أَنْفَقَ مِثْلَ أُحُدٍ ذَهَبًا مَا أَدْرَكَ مُدَّ أَحَدِهِمْ وَلاَ نَصِيفَهُ

அல்லாஹ்வின் தூதர் ﷺ அவர்கள் கூறினார்கள்: எனது ஸஹாபாக்களை ஏசாதீர்கள்! எனது தோழர்களை ஏசாதீர்கள். என் உயிர் எவன் கையிலுள்ளதோ, அவன் மீது சத்தியமாக! உங்களில் ஒருவர் உஹுத் மலையளவுக்கு தங்கத்தை செலவிட்டாலும், என் தோழர்கள் செலவிட்ட இரு கையளவு அல்லது அதில் பாதியளவைக் கூட எட்ட முடியாது. (அறிவிப்பாளர்: அபூ ஹுரைரா ؓ, நூல்: முஸ்லிம் - 6651)

عَنْ أَبِى سَعِيدٍ قَالَ كَانَ بَيْنَ خَالِدِ بْنِ الْوَلِيدِ وَبَيْنَ عَبْدِ الرَّحْمَنِ بْنِ عَوْفٍ شَىْءٌ فَسَبَّهُ خَالِدٌ فَقَالَ رَسُولُ اللَّهِ -صلى الله عليه وسلم- لاَ تَسُبُّوا أَحَدًا مِنْ أَصْحَابِى فَإِنَّ أَحَدَكُمْ لَوْ أَنْفَقَ مِثْلَ أُحُدٍ ذَهَبًا مَا أَدْرَكَ مُدَّ أَحَدِهِمْ وَلاَ نَصِيفَهُ

காலித் பின் வலீத் ؓ அவர்களுக்கும் அப்துர் ரஹ்மான் பின் அவ்ஃப் ؓ அவர்களுக்கும் மத்தியில் ஒரு விஷயத்தில் பிரச்சனை இருந்தபோது காலித் ؓ அவர்கள் அப்துர் ரஹ்மான் பின் அவ்ஃப் ؓ அவர்களை ஏசினார்கள். அப்போது அல்லாஹ்வின் தூதர் ﷺ அவர்கள் கூறினார்கள்: எனது தோழர்களில் யார் ஒருவரையும் ஏசாதீர்கள். உங்களில்

ஒருவர் உஹுத் மலையளவுக்கு தங்கத்தை செலவிட்டாலும் ஸஹாபாக்களில் ஒருவர் செலவிட்ட இரு கையளவு அல்லது அதில் பாதியளவைக்கூட எட்ட முடியாது. (அறிவிப்பாளர்: அபூ சயீத் அல்குத்ரி ﵁, நூல்: முஸ்லிம் - 6652)

ஹுதைபிய்யா உடன்படிக்கைக்குப் பிறகு இஸ்லாமை ஏற்ற காலித் ﵁ அவர்கள் மற்றும் அவர்களைப் போன்றவர்களின் அதிகமான அமல்கள், அவர்களுக்கு முன்பு இஸ்லாமை ஏற்ற அப்துர் ரஹ்மான் பின் அவ்ஃப் ﵁ மற்றும் அவர்களைப் போன்ற ஸஹாபாக்களின் குறைவான அமலுக்கு முன்பு சமமாகாது. ஹுதைபிய்யா உடன்படிக்கைக்கு முன்பு அல்லது பின்பு இஸ்லாமை ஏற்ற ஒவ்வொருவருக்கும் நபி ﷺ அவர்களோடு தோழமை கொண்டதற்கான சிறப்பிருக்கிறது. இத்தகைய சிறப்புகளைப் பெற்றவர்களுக்கு மத்தியிலேயே இத்தகைய நிலை என்றால், நபி ﷺ அவர்களின் தோழமையை பெறாதவர்களின் அமல்கள் எப்படி ஸஹாபாக்களின் அமலுக்கு ஈடாகும்? நிச்சயமாக ஸஹாபாக்களுக்கும் அவர் களுக்குப் பின் வந்தவர்களுக்கும் இடையே மிகப்பெரும் வேறுபாடு உள்ளது. இந்த வேறுபாடானது வானத்திற்கும் பூமிக்கும் இடைப்பட்ட தொலைத்தூரத்தை விட மிக அதிகமானதாகும். இது அல்லாஹ்வின் அருளாகும் அவன் நாடியவர்கள் மீது அதனை ஏற்படுத்துகிறான் அல்லாஹ் மகத்தான அருளுடையவன்.

அல்குர்ஆன் மற்றும் சுன்னாவில் இருந்து குறிப்பிடப்பட்ட இந்த சில தகவல்கள் அந்த மேன்மையான ஸஹாபாக்களின் சிறப்பை எடுத்துரைக்கின்றன. அவர்களை போன்று யாரும்

வந்ததில்லை. இனி வரப் போவதுமில்லை. அல்லாஹ் அவர்கள் அனைவரையும் பொருந்திக் கொண்டான்.

## ஸஹாபாக்கள் அனைவரும் நேர்மையானவர்கள்

ஸஹாபாக்கள் அனைவரும் நேர்மையானவர்கள் என அல்லாஹ்வும் அவனது தூதரும் சான்று வழங்கியுள்ளார்கள்.

அல்லாஹ்வின் தூதர் ﷺ அவர்களின் ஸஹாபாக்கள் அனைவரும் நேர்மையானவர்கள். அவர்களுக்கு இடையே (எதிரிகளின் சூழ்ச்சியினால்) ஏற்பட்ட போரில் கலந்து கொண்டவர்களும் கலந்து கொள்ளாதவர்களும் நேர்மை யானவர்கள் என அனைத்து அறிஞர்களுக்கு மத்தியிலும் ஏகோபித்த முடிவு ஏற்பட்டுள்ளது என இமாம் நவவீ رحمه الله அவர்கள் கூறுகிறார்கள். (நூல்: அத்தக்ரீப் 1/21)

ஸஹாபாக்கள் அனைவரும் நேர்மையானவர்கள் என்பதில் அஹ்லுஸ்ஸுன்னா அறிஞர்கள் ஒருமித்த கருத்தில் உள்ளார்கள். இதில் சில பித்அத்வாதிகளைத் தவிர யாரும் கருத்து வேறுபாடு கொள்ளவில்லை. ஆகவேதான் ஹதீஸ் அறிவிப்புகளில் ஸஹாபி யார் என்ற விவரத்தை தாபியீ குறிப்பிடாமல் இருந்தாலும் அது அந்த அறிவிப்பில் எந்த பாதிப்பையும் ஏற்படுத்தாது. ஏனெனில் ஸஹாபாக்கள் அனைவரும் நேர்மையாளர்கள் ஆவார்கள் என்று ஹாபிள் இப்னு ஹஜர் رحمه الله அவர்கள் கூறுகிறார்கள். (நூல்: அல்இஸாபா ஃபீ தம்யீஜி ஸஹாபா

கதீப் அல்பக்தாதி கூறுகிறார்கள்: ஹதீஸ்களை நபி ﷺ

அவர்களிடமிருந்து முறிவுறாத தொடரைக் கொண்டு அறிவிக்கும் ஒவ்வொரு அறிவிப்பாளரின் நம்பகத் தன்மையை நிரூபணம் செய்யப்பட்டும், அவரின் நிலை குறித்த விபரங்களை அலசிய பிறகே அவருடைய அறிவிப்பு ஆதாரமாக ஏற்கப்படும். ஸஹாபாக்களை தவிர்த்து, ஸஹாபாக்களின் நம்பகத்தன்மையை நிரூபிக்க வேண்டுமென்ற அவசியமில்லை. ஏனெனில் ஸஹாபாக்களின் நேர்மையையும், அவர்களின் தூய்மையையும் அல்லாஹ்வே தனது அருள்மறையிலேயே நிரூபித்துள்ளான் என்பது அறியப்பட்டதாகும்.

பிறகு கதீப் அல்பக்தாதி அவர்கள், ஸஹாபாக்களின் சிறப்பைப் பற்றி வந்துள்ள சில அல்குர்ஆன் வசனங்களையும் ஹதீஸ்களையும் குறிப்பிட்டுவிட்டு கூறுகிறார்கள்: அல்லாஹ் மற்றும் அவனது தூதரிடமிருந்து மேலே நாம் குறிப்பிட்ட ஸஹாபாக்களின் சிறப்பை எடுத்துரைக்கும் தகவல்கள் எதுவும் இல்லையென்றாலும், சொத்து சுகங்கள், சொந்த பந்தங்கள் அனைத்தையும் விட்டு இஸ்லாமிய மார்க்கத்திற்காக மக்காவிலிருந்து மதீனா நோக்கிச் சென்ற அவர்களின் புலம்பெயர்தல் (ஹிஜ்ரத்), அல்லாஹ்வின் பாதையில் அவர்கள் செய்த ஜிஹாத், மக்காவிலிருந்து ஹிஜ்ரத் செய்தவர்களுக்கு மதீனாவாசிகள் செய்த உதவி, இஸ்லாத்திற்காக உயிரையும் உடைமையையும் அர்ப்பணித்தது, அல்லாஹ்விற்காக இறைமறுப்பாளர்களான தங்களின் தந்தையர்களையும், பிள்ளைகளையும் போர்க்களத்தில் கொன்றது, மார்க்கத்தின் நலனுக்காக அரும்பாடுபட்டது, அல்லாஹ்வின் மீதும் மறுமை

நாள் மீதும் அவர்களின் பலமான மற்றும் உறுதியான நம்பிக்கை ஆகியவை அனைத்தும் அவர்களின் நேர்மைக்கும், தூய்மைக்கும் உறுதியான சான்றாகும். மேலும் அவர்களுக்குப் பின் வரக்கூடிய நேர்மையாளர்கள், தூய்மையாளர்கள் என்று சான்று வழங்கக்கூடிய அனைவரையும் விடவும் அவர்கள் மிக்க மேலானவர்கள். (நூல்: அல்கிஃபாயா 1/46)

அபூ ஜுர்ஆ அர்ராஜி அவர்கள் கூறுகிறார்கள்: அல்லாஹ்வின் தூதர் ﷺ அவர்களின் ஸஹாபாக்களிலிருந்து ஒரு ஸஹாபியைக்கூட குறை கூறுபவனைக் கண்டால் அந்தக் குறை கூறுபவன் ஜின்திக்* ஆவான் என்பதை நன்றாக அறிந்து கொள்ளுங்கள். முஹம்மத் ﷺ அல்லாஹ்வின் தூதர் என்பதை உறுதியாக நாம் ஏற்றுக் கொண்டோம். அல்குர்ஆன் அல்லாஹ்வின் வேதம் என்பதையும் உறுதியாக நாம் ஏற்றுக் கொண்டோம். இந்த அல்குர்ஆனும், சுன்னாவும் நம்வரை வந்தடைய அல்லாஹ்வின் தூதர் ﷺ அவர்களின் ஸஹாபாக்களே காரணமாக இருந்தார்கள். நிச்சயமாக இந்த ஜின்திக்குகள், அல்குர்ஆன் மற்றும்

---

* **ஜின்திக்:** இஸ்லாமியப் போர்வையில் வெளிப்படையாக இருந்து கொண்டும் அந்தரங்கத்தில் யூத, கிறித்துவ மற்றும் ஏதேனும் ஒரு மதத்தைப் பின்பற்றி கொண்டும் பகிரங்கமாக இஸ்லாத்திற்கு எதிரான கருத்துகளைக் கூறி எதிர்ப்பவன். ஜின்திக் நயவஞ்சகனைப் போன்றவன் ஆவான். ஜின்திக் - நயவஞ்சகன், இவர்கள் இருவருக்கும் மத்தியில் உள்ள வித்தியாசம்: நயவஞ்சகன் தன்னை வெளிப்படையாக முஸ்லிம் என்று கூறிவிட்டு தன்னுடைய அந்தரங்கத்தை வெளிப்படுத்தாமல் இருப்பான். ஜின்திக் தன்னை முஸ்லிம் என்று கூறிக்கொண்டு தனது அந்தரங்கத்தை பகிரங்கமாக வெளிப்படுத்துவான். அலீ رضي الله عنه அவர்கள் தனது ஆட்சி காலத்தில் இந்த ஜின்திக்குகளைக் கொன்றார்கள்.

சுன்னாவை அசத்தியமானதாக ஆக்கிடவே நமது இந்த சாட்சியாளர்களை குறைகூற நாடுகின்றனர். இத்தகைய ஜின்திக்குகளை குறை கூறுவதே மிகப் பொருத்தமானதாகும். (இதை கதீப் அல்பக்தாதி அறிவிப்பாளர் தொடரைக் கொண்டு அர் ஜுர்ஆ அர்ராஜி அவர்களிடமிருந்து அறிவிக்கிறார்கள், நூல்: அல்கிஃபாயா 1/49)

## ஸஹாபாக்கள் தொடர்பாக அஹ்லுஸ்ஸுன்னாவின் கொள்கையின் சாரம்சம்

ஸஹாபாக்கள் விஷயத்தில் அஹ்லுஸ்ஸுன்னா, மிகைப்படுத்துதல் மற்றும் குறைபடுத்துதல் ஆகிய இரு நிலைகளில் எதனையும் சாராத நடுநிலையில் உள்ளனர். ஸஹாபாக்களை கண்ணியப்படுத்துகிறோம் என்ற பெயரில் அல்லாஹ் அல்லது அவனது தூதருக்கு மட்டுமே தகுதியான அந்தஸ்தளவிற்கு ஸஹாபாக்களை உயர்த்தி கண்ணியப்படுத்துவது. இது ஸஹாபாக்களின் விஷயத்தில் வரம்பு மீறுபவர்களின் நிலையாகும். குறைப்படுத்தியும், திட்டியும் அவர்களை இழிவுபடுத்துவது. இது ஸஹாபாக் களின் விஷயத்தில் குறை காண்பவர்களின் நிலையாகும். இந்த இரு நிலைகளையும் தவிர்த்து நடுநிலையை மேற்கொள்பவர்களே அஹ்லுஸ்ஸுன்னா. அவர்கள் ஸஹாபாக்கள் அனைவரையும் நேசிப்பார்கள். நீதி மற்றும் நேர்மையின் அடிப்படையில் ஸஹாபாக்களுக்கு தகுதியான அந்தஸ்தில் மட்டுமே அவர்களை வைப்பார்கள். ஆகவே அவர்களுக்கு தகுதியற்ற நிலையில் அவர்களை உயர்த்தவும் மாட்டார்கள். அவர்களுக்கு பொருத்தமில்லாத

நிலையை விட்டு அவர்களை தாழ்த்தி விடவும் மாட்டார்கள். ஸஹாபாக்களுக்கு தகுதியான சிறப்புகளை கூறி தங்களின் நாவுகளை பசுமையாக்குவார்கள். அவர்களின் இதயங்கள் ஸஹாபாக்களின் நேசத்தைக் கொண்டு நிரம்பியிருக்கும்.

ஸஹாபாக்களுக்கு மத்தியில் (எதிரிகளின் தூண்டுதலினால்) நடந்த பிரச்சனைகள் தொடர்பானவற்றில் சரியான நிலை என்னவென்றால் அதில் அவர்கள் ஆய்வு (இஜ்திஹாத்) செய்யக் கூடியவர்களாக இருந்தனர். அவர்களின் ஆய்வு சரியானதாக இருந்தால் அதற்கு இரண்டு நன்மைகள் கிடைக்கும். ஆய்வு செய்ததற்கு ஒரு நன்மையும், சரியாக ஆய்வு செய்ததற்கு மற்றொரு நன்மையும் கிடைக்கும். அதே நேரம் ஆய்வில் அவர்கள் தவறிழைத்தால் ஒரு நன்மை அவர்களுக்குக் கிடைக்கும். அவர்களுக்கு ஏற்பட்ட தவறை அல்லாஹ் மன்னித்து விடுகிறான். அவர்கள் நபிமார்களைப் போன்று பாவங்களை விட்டு பாதுகாக்கப்பட்டவர்கள் அல்ல. மாறாக அவர்களும் சரியான, தவறான முடிவு செய்கின்ற சராசரி மனிதர்களே. அவர்களின் ஆய்வு சரியானதாகவும் இருக்கலாம் அல்லது தவறானதாகவும் இருக்கலாம். என்றாலும் மற்றவர்களின் ஆய்வுகளைவிட ஸஹாபாக்களின் ஆய்வுகள் பெரும்பாலும் சரியாகவே இருக்கும். மற்றவர்களின் ஆய்வுகளில் ஏற்படும் தவறை விடவும் ஸஹாபாக்களிடம் குறைவாகவே தவறுகள் ஏற்படும். அவர்களுக்கு அல்லாஹ்வின் புறத்திலிருந்து மன்னிப்பும், பொருத்தமும் உண்டு.

மனிதர்களில் புனிதரான நபி ﷺ அவர்களின் தோழமைக்கு

மனிதர்களிலிருந்தே தேர்வு செய்யப்பட்ட இந்தப் புனிதர் கள் சம்பந்தமாக இத்தகைய தூய மற்றும் தெளிவான கொள்கையை பறைசாற்றியே அஹ்லுஸ்ஸுன்னாவின் புத்தகங்கள் நிறைந்திருக்கின்றன.

## ஸஹாபாக்களை பற்றிய ஸலஃப் அறிஞர்களின் கூற்றுகள்

### இமாம் தஹாவி ﷬ அவர்களின் கூற்று

இமாம் தஹாவி ﷬ அவர்கள் அஹ்லுஸ்ஸுன்னாவின் கொள்கையை குறிப்பிடும் போது:

நாங்கள் அல்லாஹ்வின் தூதர் ﷺ அவர்களின் ஸஹாபாக் களை நேசிக்கிறோம். அவர்களில் எவரையும் நேசிப்பதில் வரம்பு மீறவும் மாட்டோம். அவர்களைக் குறை கூறி அவர்களில் எவரையும் விட்டு விலகவும் மாட்டோம். ஸஹாபாக்களைக் குறை கூறி வெறுப்பவர்களை நாம் வெறுப்போம். ஸஹாபாக்களின் நன்மையான காரியங் களையே நாம் நினைவு கூர்வோம். அவர்களை நேசிப்பது மார்க்கப் பற்றுக்கும் இறைநம்பிக்கைக்கும் மற்றும் அழகிய முறையில் செயல்படுவதற்கும் அடையாளமாகும். அவர்களை வெறுப்பது இறைநிராகரிப்புக்கும், நயவஞ்சகத் தனத்துக்கும் வழிகேட்டிற்கும் அடையாளமாகும். (நூல்: அல்அகீதத்துத் தஹாவிய்யா 1/57)

### இப்னு அபி ஜைத் அல்கைர்வானி ﷬ அவர்களின் கூற்று

இப்னு அபி ஜைத் அல்கைர்வானி அல்மாலிகி ﷬

அவர்கள் தனது பிரபலமான கடிதத்தின் முன்னுரையில் அஹ்லுஸ்ஸுன்னாவின் கொள்கையை தெளிவுபடுத்துகிறார்கள்: அல்லாஹ்வின் தூதர் ﷺ அவர்களை கண்டவர்களே சிறந்த தலைமுறையினர் ஆவார்கள். ஸஹாபாக்களிலேயே மிகவும் சிறந்தவர்கள் நேர்வழி பெற்ற கலீஃபாக்கள். அவர்களில் முதலாவதாக அபூபக்கர் رضي الله عنه, அடுத்து உமர் رضي الله عنه, அடுத்து உஸ்மான் رضي الله عنه, அடுத்து அலீ رضي الله عنه. அல்லாஹ்வின் தூதர் ﷺ அவர்களின் ஸஹாபாக்களில் எவரைப் பற்றி பேசுவதாக இருந்தாலும் நல்லதையே பேச வேண்டும். அவர்களுக்கு மத்தியில் (எதிரிகளின் தூண்டுதலால்) நடந்த பிரச்சினைகளைப் பற்றி பேசமால் இருக்க வேண்டும். நல்லெண்ணம் கொள்வதற்கு மனிதர்களிலேயே அவர்கள்தான் அதிகத் தகுதி பெற்றவர்களாக இருக்கிறார்கள். மேலும் அவர்களைப் பற்றி நல்லெண்ணம் மட்டுமே கொள்ள வேண்டும் (நூல்: அர்ரிஸாலத்துல் கைர்வானி, 1/9)

## இமாம் அஹமத் رحمه الله அவர்களின் கூற்று

அல்லாஹ்வின் தூதர் ﷺ அவர்களின் தோழர்கள் பற்றிய நன்மையான செயல்களை நினைவு கூறுவதும் அவர்களுக்கு மத்தியில் நடந்த கருத்து வேறுபாடுகளைப் பற்றி பேசாமல் நிறுத்தி கொள்வதும் இஸ்லாமியக் கொள்கையில் உள்ளதாகும். அல்லாஹ்வின் தூதர் ﷺ அவர்களின் தோழர்களை அல்லது அவர்களில் இருந்து ஒருவரைக் குறை கூறினாலும் அவர் பித்அத்வாதி மற்றும் ராஃபிஜி ஆவார். நபித்தோழர்களை நேசிப்பது இஸ்லாமியக் கொள்கையில் உள்ளதாகும். அவர்களுக்காக துஆ செய்வது நெருக்கத்தைப் பெற்றுத்

தரும். அவர்களைப் பின்பற்றுவது அல்லாஹ்வின் பக்கம் நெருங்குவதற்குரிய வழியை ஏற்படுத்தும். அவர்களின் அடிச்சுவடுகளை பற்றிப்பிடிப்பது சிறப்புக்கு வழி வகுக்கும்.

மேலும் இமாம் அஹமத் பின் ஹம்பல் ﵀ அவர்கள் கூறுகிறார்கள்: நபித்தோழர்களிடம் ஏற்பட்ட தவறுகளிலிருந்து எந்த ஒன்றையும் சுட்டிக்காட்ட எவருக்கும் உரிமையில்லை. அவர்களில் எந்த ஒரு நபித்தோழரையும் குறைகூறக் கூடாது. எனினும், யாரேனும் ஒருவர் அவர்களில் ஒருவரை குறை கூறினாலும் அவரை சீர்திருத்துவதும், தண்டிப்பதும் ஆட்சியாளர்கள் மீது கடமையாகும். ஆட்சியாளர் குறை கூறுபவரை அப்படியே மன்னித்துவிடக் கூடாது. மாறாக அவரை தண்டித்தே ஆக வேண்டும். பிறகு தவ்பா செய்யத் தூண்ட வேண்டும். அவர் தவ்பா செய்தால் அதனை ஏற்று அவரை விடலாம். ஆயினும் தவ்பா செய்ய மறுத்து விட்டால் மீண்டும் அவரை தண்டிக்க வேண்டும். அவர் தவ்பா செய்து மீள்கின்ற வரை அவரை சிறையில் அடைக்க வேண்டும். (நூல்: அஸ்ஸுன்னா, பக்கம்-17)

## இமாம் அபூ உஸ்மான் அஸ்ஸாபூனி ﵀ அவர்களின் கூற்று

அல்லாஹ்வின் தூதர் ﷺ அவர்களின் தோழர்களுக்கு மத்தியில் (எதிரிகளின் தூண்டுதலால்) நடந்த பிரச்சனைகளைப் பற்றிப் பேசாமல் இருப்பதே சரியான நிலைப்பாடு என்று ஸலஃப்கள் மற்றும் அஸ்ஹாபுல் ஹதீஸ் கருதுகின்றனர். எதனை குறிப்பிட்டால் அது அவர்களை இழிவுபடுத்தியதாகவும், குறை கூறியதாகவும் ஆகுமோ

அத்தகைய கூற்றுகளை கூறுவதை விட்டு தங்கள் நாவுகளை பரிசுத்தப்படுத்திக் கொள்வார்கள். அவர்கள் அனைவர் மீதும் இரக்கம் கொள்வார்கள். அவர்கள் அனைவர் மீதும் நேசம் கொள்வார்கள். (நூல்: அகீதத்துஸ் ஸலஃஃப் வ அஸ்ஹாபுல் ஹதீஸ், பக்கம்-93)

## ஷைகுல் இஸ்லாம் இப்னு தைமிய்யா ﵀ அவர்களின் கூற்று

சத்தியப் பாதையிலுள்ள அஹ்லுஸ்ஸுன்னத் வல் ஜமாத்தினரின் அடிப்படைக் கொள்கைகளில் ஒன்று, அவர்கள் தங்களின் நாவையும் உள்ளத்தையும் அல்லாஹ்வின் தூதர் ﷺ அவர்களின் தோழர்கள் விஷயத்தில் பாதுகாப்பார்கள். அல்லாஹ் அவர்களின் பண்பை அல்குர்ஆனில் குறிப்பிட்டது போல்.

மேலும் அவர்களுக்கு பின் வந்தார்களே அத்தகையவர்கள், எங்கள் இரட்சகனே! எங்களையும் விசுவாசம் கொள்வதில் எங்களை முந்தி விட்டார்களே அத்தகைய எங்களுடைய சகோதரர்களையும் நீ மன்னித்தருள்வாயாக! விசுவாசங்கொண்டவர்களைப் பற்றி எங்களுடைய இதயங்களில் வெறுப்பை ஏற்படுத்தாதிருப்பாயாக! எங்கள் இரட்சகனே! நிச்சயமாக நீ மிக்க இரக்கமுடையவன் மிக்க கருணையுடையவன் என்று (பிராத்தனை செய்தும்) கூறுவார்கள். (59:8-10)

நபி ﷺ அவர்களுக்கு கீழ்படிந்தவர்களாகவும், என் உயிர் எவன் கையிலுள்ளதோ அவன் மீது சத்தியமாக! உங்களில்

ஒருவர் உஹுத் மலையளவுக்கு தங்கத்தை செலவிட்டாலும், நபித்தோழர்களில் ஒருவர் செலவிட்ட இரு கையளவு அல்லது அதில் பாதியளவைக் கூட எட்ட முடியாது என்றார்கள்.

அல்குர்ஆன், சுன்னா மற்றும் அறிஞர்களின் ஏகோபித்த முடிவின் அடிப்படையில் ஸஹாபாக்களின் சிறப்புகள், அந்தஸ்துகள் பற்றி வந்துள்ளதை அப்படியே அஹ்லுஸ்ஸுன்னா ஏற்றுக் கொள்வார்கள். ஹுதைபிய்யா உடன்படிக்கைக்கு முன் செலவு மற்றும் ஜிஹாத் செய்த ஸஹாபாக்களை உடன்படிக்கைக்குப் பின்னுள்ள ஸஹாபாக்களைவிட சிறப்பித்து கூறுவார்கள். அன்ஸாரிகளை விட முஹாஜிர்களை முன்னிலைப்படுத்துவார்கள்.

பத்ர் போரில் கலந்துகொண்ட ஸஹாபாக்கள் பற்றி அல்லாஹ் நீங்கள் விரும்பியதைச் செய்யுங்கள் உங்களை நான் மன்னித்து விட்டேன் என்று கூறியதை நம்புகின்றார்கள். அவ்வாறே ஹுதைபிய்யா உடன்படிக்கையில் பைஅத் செய்த ஸஹாபாக்களில் ஒருவரும் நரகம் செல்லமாட்டார்கள் என்று நபி ﷺ அவர்கள் கூறியதையும் நம்புகின்றனர்.

அல்லாஹ் அவர்களைப் பொருந்திக் கொண்டான் அவர்களும் அல்லாஹ்வை பொருந்திக் கொண்டனர். அவர்கள் ஆயிரத்து நானூறுக்கும் அதிகமான எண்ணிக்கையை கொண்டவர்கள். அல்லாஹ்வின் தூதர் ﷺ அவர்கள் சொர்க்கம் செல்வார்கள் என்று யாருக்கு சான்று வழங்கினார்களோ அவர்களுக்கு இவர்களும் சான்று வழங்குவார்கள். உதாரணத்திற்கு பத்து ஸஹாபாக்கள் மற்றும் ஸாபித் பின் கைஸ் ஆகியவர்களை போன்றவர்கள்.

நபி ﷺ அவர்களுக்குப் பிறகு இந்த உம்மத்தில் சிறந்தவர்களாக அபூபக்கர் ؓ அவர்களும் பிறகு உமர் ؓ அவர்களும் பிறகு மூன்றாவதாக உஸ்மான் ؓ அவர்களும் பிறகு நான்காவதாக அலீ ؓ அவர்களும் இருக்கிறார்கள் என்று அலீ ؓ மற்றும் மற்ற ஸஹாபாக்களிடமிருந்து பரவலாக அறிவிக்கப்படுகின்ற அறிவிப்புகளை ஏற்றுக் கொள்வார்கள்.

அமீராக பைஅத் எடுப்பதில் உஸ்மான் ؓ அவர்களை அலீ ؓ அவர்களைவிட முற்படுத்தியதை அனைவரும் ஒப்புக் கொள்கின்றனர். எனினும் அஹ்லுஸ்ஸுன்னாவில் சிலர், அபூபக்கர் ؓ, உமர் ؓ அவர்களை முற்படுத்துவதை ஒப்புக் கொள்கின்றனர். அவர்களுக்குப் பிறகு சிறந்தவர்கள் உஸ்மான் ؓ அவர்களா? அல்லது அலீ ؓ அவர்களா? என்பதில் கருத்து வேறுபாடு கொண்டிருக்கின்றனர். சிலர் உஸ்மான் ؓ அவர்களை முற்படுத்துகின்றனர் நான்காவதாக அலீ ؓ அவர்களை குறிப்பிடுகின்றனர். சிலர் அலீ ؓ அவர்களை முற்படுத்துகின்றனர். சிலர் இதில் எதுவுமே கூறாமல் நிறுத்திக்கொள்கின்றனர். எனினும் அஹ்லுஸ்ஸுன்னா அலீ ؓ அவர்களைவிட உஸ்மான் ؓ அவர்களையே சிறப்பில் முற்படுத்துகின்றனர். உஸ்மான் ؓ, அலீ ؓ இவர்கள் இருவரில் சிறப்பில் யார் முந்தியவர் என்பது கொள்கை சார்ந்த விஷயம் ஒன்றுமில்லை. இதில் எதிர் கருத்திலிருப்பவர்கள் வழிதவறி விடுவார்கள் என்று சொல்வதற்கு. எனினும் கிலாஃபாத் விஷயத்தில் நபி ﷺ அவர்களுக்குப் பிறகு அபூபக்கர் ؓ, உமர் ؓ, உஸ்மான் ؓ, அலீ ؓ அவர்களை கலீஃபாவாக நம்புவது அவசியமானதாகும். இவர்களில்

எவரேனும் ஒருவர் கிலாஃபத்திற்கு தகுதியற்றவர் என்று குறை கூறுபவர் வீட்டுக் கழுதையைவிட வழி தவறியவர் ஆவார்.

பிறகு ஷைகுல் இஸ்லாம் இப்னு தைமிய்யா ﵀ அவர்கள், அல்லாஹ்வின் தூதர் ﷺ அவர்களின் குடும்பத்தார்களை நேசிப்பதையும், அவர்களோடு நல்லுறவு கொள்வதையும் அவர்களின் விஷயத்தில் அல்லாஹ்வின் தூதர் ﷺ அவர்களின் வஸிய்யத்தைப் பேணுவதையும் அல்லாஹ்வின் தூதர் ﷺ அவர்களின் மனைவிமார்களை முஃமீன்களின் தாயாகவும் அவர்களே நபி ﷺ அவர்களின் மனைவிகளாக மறுமையில் இருப்பார்கள் என்று நம்பிக்கை கொள்வதைப் பற்றியும் குறிப்பிட்டுள்ளார்கள்.

பிறகு ஷைகுல் இஸ்லாம் இப்னு தைமிய்யா ﵀ அவர்கள் கூறுகிறார்கள்: அஹ்லுஸ்ஸுன்னா ஸஹாபாக்களை வெறுக்கும், ஏசும் ராபிஜாக்களின் வழியை விட்டும் தங்களைக் காத்துக் கொள்வார்கள். அவ்வாறே நபி ﷺ அவர்களின் குடும்பத்தார்களை தனது சொல்லாலும் செயலாலும் துன்புறுத்தும் நவாஸிபுகள் என்ற பிரிவினரின் வழியை விட்டும் தங்களை காத்துக் கொள்வார்கள். ஸஹாபாக்களுக்கு மத்தியில் (எதிரிகளின் தூண்டுதலால்) நடந்த பிரச்சனைகளை பற்றிப் பேசமாட்டார்கள்.

அவர்களை தவறாக சித்தரித்து வந்துள்ள அறிவிப்புகளில் சில பொய்யானது என்றும் அதில் சிலவற்றில் கூடுதல், குறைவு ஏற்பட்டுள்ளது என்றும், அவைகளின் உண்மை நிலை மாற்றப்பட்டு உள்ளது என்றும் அஹ்லுஸ்ஸுன்னா

நம்புகின்றனர். அவர்களுக்கு மத்தியில் நடந்த சச்சரவுகளின் சரியான நிலை அவர்கள் குற்றமற்றவர்கள் ஆவார்கள். அதில் அவர்களின் ஆய்வு சரியானதாகவோ அல்லது தவறானதாகவோ இருக்கலாம்.

ஸஹாபாக்களில் ஒவ்வொருவரும் பெரும்பாவங்கள் மற்றும் சிறிய பாவங்களை விட்டு பரிசுத்தமானவர்கள் என்று அஹ்லுஸ்ஸுன்னா நம்புவதில்லை. அவர்களிடத்திலும்கூட பாவங்கள் நிகழலாம் என்கின்றனர். எனினும், அவர்கள் ஈமான் கொள்வதில் முந்தியவர்களாகவும் சிறப்புகளுடையவர்களாக இருப்பதால் அவர்களிடம் நடந்தவைகள் அதனால் மன்னிக்கப்பட்டு விடும்.

அவர்களிடம் பாவம் நிகழ்ந்தாலும் அவர்களுக்குப் பின் வந்தவர்களின் பாவங்கள் மன்னிக்கப்படுவதை விடவும் அவர்களின் பாவங்கள் அதிகமாக மன்னிக்கப்படும். அவர்களுக்குப்பின் வந்தவர்களை விடவும் அவர்களின் நன்மைகள் அதிகமாக இருப்பதே இதற்கான காரணமாகும். ஆக அவர்களின் நன்மைகள் அவர்களின் பாவங்களுக்கு பரிகாரமாக ஆகிவிடுகிறது.

மேலும் நபி ﷺ அவர்களின் சுன்னாவிலும் அவர்கள் தலைசிறந்த சமுதாயத்தினர் என்றும் அவர்களுக்குப்பின் வருபவர் உஹுத் மலையளவுக்கு தங்கத்தைத் தர்மம் செய்வதைவிட ஸஹாபாக்கள் ஒரு கையளவு செய்த தர்மம் சிறந்ததாகும் என்றும் வந்துள்ளது.

அவர்களில் ஒருவர் ஒரு பாவத்தை செய்து, பிறகு தவ்பா

செய்தோ அல்லது வேறு ஒரு நன்மையை செய்தோ அதற்கு பரிகாரமாகவோ அல்லது அவர் ஈமான் கொள்வதில் முந்தியதால் அந்த சிறப்பைக் கொண்டு அவரது பாவம் மன்னிக்கப்படவோ அல்லது மனிதர்களிலேயே நபி ﷺ அவர்களின் சிபாரிசை பெறுவதற்கு அதிகத் தகுதி பெற்றவர்களாக இருக்கின்றார்கள் என்ற அடிப்படையில் அவர்களின் பரிந்துரை மூலம் மன்னிக்கப்பட்டோ அல்லது இவ்வுலக துன்பங்களை அடைவதினாலோ அவருடைய பாவங்களுக்கு அவை பரிகாரமாக ஆகிவிடுகின்றன.

மேலே நாம் குறிப்பிட்ட நிலையானது அவர்களிடம் பாவங்கள் நிகழ்ந்தது என்று உறுதி செய்யப்படும் தருணத்தில்தான். இது இப்படியிருக்க ஆய்வு தொடர்பானவற்றில் அவர்களின் நிலை வேறு மாதிரியானதாகும். அதில் அவர்கள் சரியான நிலையில் இருந்தால் அவர்களுக்கு இரு நன்மைகள் உண்டு. தவறான நிலையில் இருந்தால் அவர்களுக்கு ஒரு நன்மை உண்டு. அவர்களின் தவறுகள் மன்னிக்கப்பட்டு விடும்.

அல்லாஹ் மற்றும் அவனது தூதரின் மீது ஈமான் கொண்டது, அல்லாஹ்வின் பாதையில் ஜிஹாத், ஹிஜ்ரத், உதவி, பலனளிக்கும் கல்வி மற்றும் ஸாலிஹான அமல்கள் ஆகியவைகளை செய்த அந்த சமூகத்தின் சிறப்பிற்கு எதிரில், அவர்களில் சிலரிடம் ஏற்பட்ட தவறுகள் மிகக் குறைவானதும் அவை அனைத்தும் மன்னிக்கப்பட்டதாகவும் இருக்கிறது.

அல்லாஹ் எவர்கள் மீது சிறப்புகளைக் கொண்டு அருள்புரிந்தானோ அந்த சமூகத்தின் வரலாறை யாரொருவர்

கல்வி மற்றும் ஆழ்ந்த சிந்தனையுடன் காண்கிறாரோ அவர் படைப்பினங்களிலேயே நபிமார்களுக்குப் பிறகு இவர்கள் தான் சிறந்தவர்கள் என்பதையும் இவர்களைப் போன்றவர்கள் இதுவரை வந்ததில்லை இனி வரப்போவதுமில்லை என்பதையும் உறுதியாக அறிந்து கொள்வார். அல்லாஹ்வால் கண்ணியப்படுத்தப்பட்ட சமுதாயங்களிலேயே தலைசிறந்த சமுதாயமாக இவர்கள் இருக்கிறார்கள். (நூல்: அல்அகீதத்துல் வாஸிதிய்யா, 1/26)

நபிமார்கள் மற்றும் தூதர்களுக்குப் பிறகு சிறந்த படைப்பாக உள்ள ஸஹாபாக்களின் விஷயத்தில் அவசியம் நம்பிக்கை கொள்ளவேண்டிய ஸலஃபுஸ் ஸாலிஹீன்களின் சில கூற்றுகளை இந்த அறிஞர்கள் தங்களது நூலில் இடம்பெறச் செய்துள்ளார்கள். அதுவே இதுவரை கூறப்பட்டதாகும். அல்லாஹ்வின் அருளும், சாந்தியும் அவர்கள் மீது ஏற்படட்டும். அல்லாஹ் ஸஹாபாக்கள் அனைவரையும் பொருந்திக் கொள்வானாக!

## ஸஹாபாக்களைக் குறை கூறுவது அல்குர்ஆன் மற்றும் சுன்னாவை குறை கூறுவதாகும்

தேர்ந்தெடுக்கப்பட்ட இந்த சமூகத்தை குறை கூறுவது மார்க்கத்தை குறை கூறுவதாகும் என்பதை ஞானம் உள்ளவர்கள் புரிந்து கொள்வார்கள். ஏனெனில் இவர்கள் மூலமாகவே பின்னால் வந்தவர்களுக்கு மார்க்கத் தகவல்கள் கிடைத்தன. இது தொடர்பாக இமாம் அபூ ஜுர்ஆ அர்ராஜி அவர்களின் கூற்றை முன்பே நாம் குறிப்பிட்டுள்ளோம் (மீண்டும் கூறுகிறோம்) இந்த அல்குர்ஆனையும்,

சுன்னாவையும் அல்லாஹ்வின் தூதர் ﷺ அவர்களின் ஸஹாபாக்களே நம் காலம்வரை வந்தடைய காரணமாக இருந்தார்கள். நிச்சயமாக இந்த ஜின்திக்குகள், அல்குர்ஆன் மற்றும் சுன்னாவை அசத்தியமானதாக ஆக்கிடவே நமது இந்த சாட்சியாளர்களை குறைகூற நாடுகின்றனர். இத்தகைய ஜின்திக்குகளை குறை கூறுவதே மிகப் பொருத்தமானதாகும்.

## ஸஹாபாக்களைக் குறை கூறுவது அவர்களுக்கு எந்த இடரையும் ஏற்படுத்தாது

ஸஹாபாக்களைக் குறை காண்பதால் அது அவர்களுக்கு எந்த தீங்கையும் ஏற்படுத்தாது. மாறாக திவாலாகிப் போனவன் யார் என்ற ஹதீஸில் கூறப்பட்டதற்கேற்ப அது அவர்களுக்கு நன்மையாகவே அமையும். ஸஹாபாக்களை குறைகாண்பவர் தனக்குத் தானே தீங்கிழைத்து கொள்கிறார். எவர் தனது உள்ளத்தில் ஸஹாபாக்களின் மீது நேசம் இருப்பதாகவும், பகைமை கொள்ளாத நிலை இருப்பதாகவும் உணர்ந்து அவர்களை குறை கூறாமல் அவர்களின் நன்மைகளை மட்டுமே தனது நாவால் கூறிக் கொண்டிருக்கிறாரோ அவர் தனக்குக் கிடைத்த அருள்பாக்கியத்தின் காரணமாக அல்லாஹ்விற்கு நன்றி செலுத்தட்டும். இந்த நேர்வழியின் மீதே உறுதியாக நிலைத்திருப்பதற்கு அல்லாஹ்விடம் பிராத்திக்கட்டும்.

எவர் தனது உள்ளத்தில் ஸஹாபாக்கள் மீது பகைமை கொள்கிறாரோ, அவர்களின் தகுதிக்கு பொருந்தாதவற்றைப் பேசுகிறாரோ அவர் தன் விஷயத்தில் அல்லாஹ்வுக்கு அஞ்சிக் கொள்ளட்டும். இந்தப் பாவமான காரியத்திலிருந்து

தன்னை விலக்கிக் கொள்ளட்டும். மேலும் தவ்பா செய்வதற்கான அவகாசம் இருக்கும்போதே தவ்பா செய்து கொள்ளட்டும். அந்த அவகாசத்தை தவறவிட்டு வருந்துவதில் எந்தப் பலனும் இல்லை.

எங்கள் இரட்சகனே! நீ எங்களுக்கு நேர்வழி காட்டிய பின்னர், எங்களுடைய இதயங்களை (அதிலிருந்து) சறுகிவிடுமாறு செய்து விடாதிருப்பாயாக! மேலும் உன் புறத்திலிருந்து அருளையும் எங்களுக்கு அளிப்பாயாக! நிச்சயமாக நீயே பெரும் கொடையாளியாவாய். (அல்குர்ஆன் 3:8)

எங்கள் இரட்சகனே! எங்களையும் விசுவாசம் கொள்வதில் எங்களை முந்தி விட்டார்களே அத்தகைய எங்களுடைய சகோதரர்களையும் நீ மன்னித்தருள்வாயாக! விசுவாசங் கொண்டவர்களைப் பற்றி எங்களுடைய இதயங்களில் வெறுப்பை ஏற்படுத்தாதிருப்பாயாக! எங்கள் இரட்சகனே நிச்சயமாக நீ மிக்க இரக்கமுடையவன் மிக்க கருணையுடையவன் என்று (பிராத்தனை செய்தும்) கூறுவார்கள். (அல்குர்ஆன் 59:11)

